[27th September 1958

*Railway cess fund*

* 557 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா போர்டில் ரயில்வே செஸ் நிதியில் தற்போது எவ்வளவு பணம் இருக்கிறது ?

(ஆ) அதை ரோடு மராமத்துக்கு உபயோகிக்க சர்க்கார் அனுமதிக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Rupees 5,85,500.

(*b*) If and when an application is received from the district board, the question of permitting the district board, to utilise the amount for road works will be considered on merits.

* 590 A *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ரயில்வே செஸ் பண்டில் மதுரை ஜில்லா போர்டுக்கு உள்ள பணத்தை உடனடியாக சர்க்கார் ஜில்லா போர்டுக்கு கொடுக்க உத்தேச முண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The question of permitting the district board to divert the railway cess amount for district board works will be considered if and when a reference is received in this regard.

SRI N. R. THIAGARAJAN : மதுரை ஜில்லா போர்டில் சென்ற ஒரு ஆண்டு காலமாக ஒரு வேலையும் நடைபெறவில்லை. நடை பெற்ற வேலை பாதியில் இருக்கிறது. இந்த ரெயில்வே செஸ் பண்டி லிருந்து பணம் வாங்குவதில் கஷ்டம் இருக்கிறது என்று சொல்லுகிறார் கள். அதிலிருந்து செலவு செய்வதற்கு அனுமதிப்பார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : வேலை தொடர்ந்து நடக்க முடியாததற்குக் காரணம் நிதி நிலைமை தான். செஸ் பண்டிலிருந்து பணத்தை உபயோகிக்க இதுவரையிலும் யாதொரு விண் ணப்பமும் வரவில்லை.

SRI M. D. THIAGARAJA PILLAI : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் செய்ய வேண்டிய வேலைகளுக்கு ஜில்லா போர்டு கொடுக்கவேண்டிய 25 சத விகிதம் பகுதிப் பணத்தை, அதனுடைய நிதி நிலைமை சரியாக இல்லாததன் காரணமாக, கொடுக்கமுடியவில்லை. ஆகவே ரெயில்வே செஸ் நிதியிலிருந்து ஜில்லா போர்டுக்குக் கொடுக்க அனுமதிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஜில்லா போர்டிலிருந்து தனிப்பட்ட முறையில் அப்பீல் வந்தால், அது கவனிக்கப் படும்.

SRI V. K. KOTHANDARAMAN : இதுவரையில் ரெயில்வே செஸ் பண்டைப் பெற்றுவந்த ஜில்லா போர்டுகள் இனிமேல் இல்லையாகையால், அதை எதன் பேரில் வாங்குவது, அதை எப்படி உபயோகிப்பது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இப்பொழுது ஜில்லா போர்டு நிர்வாகத்தைக் கவனிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் இலாக்கா அதைக் கவனிக்கும்.